# சங்கரானந்தம்



காஞ்சி மஹாஸ்வாமிகளை போற்றும் பக்திப் பாடல்கள்

தேனுபுரீஸ்வரதாசன் இல.சங்கர்
104 அரவிந்த நகர், மாடம்பாக்கம், சென்னை - 126.
9884718 324



நமது இரு கண்களால் ஒரு காட்சியை காண்பது போல "உண்டு" என்றும் "இல்லை" என்றும் இரு தரப்பினரும் விவாதிக்கும் ஒருவனை நமக்குணர்த்த ஆன்மீகத்தின் இரு கண்களாக காஞ்சி சங்கர சர்வக்ஞ பீடத்தில் வீற்றிருந்து அருள்வழி காட்டும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி பெரியவாளையும் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி பெரியவாளையும் அகம் குளிர வணங்கி அவர்தம் பாதம் பணிந்து முக்கண்ணனின் அம்சமாய் நமது மூன்றாவது கண்ணான ஞானக்கண்ணை திறக்கும் மஹாசிவ ரூபனான மஹா பெரியவாளின் பேரருளால் உந்தப்பட்டு மலர்ந்த பாடல்களில் சிலவற்றை "சங்கரானந்தம்" என்னும் தொகுப்பாக மஹாஸ்வாமியின் பொற்பாதங்களில் சமர்ப்பித்து மஹாஸ்வாமியின் பக்தர்களுக்கு மஹாப்ரஸாதமாக இந்நூல் வெளிவந்துள்ளது.

தொழுத கைகளோடு மஹா ஸ்வாமியின்
பழுத்த கோலத்தை காணாது ஏங்கிய என்
அழுத கோலத்தை கண்டு மனமிறங்கி என்னை
எழுது கோலாக ஏற்றருள் புரிந்த
ஏகாம்பர சிவ மஹா பெரியவாளின்
பொற் பாதங்கள் பணிந்து
என்றென்றும் இறையருட் பணியில்,

தேனுபுரீஸ்வரதாசன் இல.சங்கர்.

திருமதி. தனுஜா சங்கர் S.கைலாஷ்

சங்கரானந்தம் - 5 நாள் : 06.01.2016

# மஹாஸ்வாமிகளின் பேரருளால் வெளிவந்துள்ள பாடல் தொகுப்புகள்

ௐ மஹாஸ்வாமிகளின் 21ம் ஆண்டு ஆராதனை நாளான 29.12.2013 அன்று வெளியான மஹாஸ்வாமிகளை போற்றும் 21 பாடல்கள் கொண்ட புத்தகம்.

ௐ மஹாஸ்வாமிகளின் 121ம் ஆண்டு ஜெயந்தி நாளான 12.06.2014 அன்று ஸ்ரீ மடத்தின் ஸ்ரீ முகத்துடன் வெளியான மஹாஸ்வாமிகளை போற்றும் 121 பாடல்கள் கொண்ட புத்தகம்.

ௐ மஹாஸ்வாமிகளின் 22ம் ஆண்டு ஆராதனை நாளான 18.12.2014 அன்று வெளியான 22 பாடல்கள் கொண்ட புத்தகம்.

ௐ மஹாஸ்வாமிகளின் ஜெயந்தி நாளான 10.06.2015 அன்று வெளியான சங்கரானந்தம் தொகுதி 4.

**சங்கரானந்த கானங்களை**
**www.soundcloud.com / madambakkamshanks**
**என்னும் வலைதளத்தில் கேட்டு மகிழலாம்**

விலைமதிப்பில்லாத பொக்கிஷத்தைக் கொண்ட இப்புத்தகங்கள் மஹா ஸ்வாமிகளின் பக்தர்களுக்கு இலவசமாக தொடர்ந்து வழங்கிட தங்களால் இயன்ற நன்கொடைகளை வழங்கி குருவருள் பெறுவீர்.

குறைந்த பட்சம் ரூ.108/- அளிப்பவர்களுக்கு இதுவரை வெளிவந்துள்ள பாடல் தொகுப்புகள் தபாலில் அனுப்பி வைக்கப்படும். தங்கள் பகுதியில் ஆன்மிக நிகழ்ச்சிகளின் போது இப்புத்தகங்களை பெருமளவில் (அச்சு விலையில்) பெற்று பக்தர்களுக்கு வழங்கி மகிழ விருப்பம் உள்ளவர்கள் அணுகவும்:

**தேனுபுரீஸ்வரதாசன் இல.சங்கர்**
104 அரவிந்த நகர், மாடம்பாக்கம், சென்னை - 600 126.
✆ **2228 2203 / 98847 18 324**
(8.00 - 10.00 pm. only)

## 1. அத்வைத அருட்குரு கானம்

(பாலும் பழமும் கைகளில் ஏந்தி - மெட்டு)



அல்லும் பகலும் அத்வைத குருவே
அருணனாய் எங்கும் வலமே வந்தீர்
அண்டியோர்க் கருள் பொழிந்தீர் நீரே
அனுஷ குருவே மஹாஸ்வாமியே

அல்லலுற்றோர்க் கருள்மழை பொழிந்தே
அல்லும் பகலும் துணை நிற்பீரே
அனுதினம் உம்மை அணுகிடுவோரை
அனவரதம்காத் தருள்வீர் நீரே

அலைபாயும் மனதை அடக்கிட நீரே
அனுதினம் துணையாய் அருள்புரிவீரே
அளவிலா ஆனந்தம் அளித்தே நீரே
அருள்புரிவீரே அத்யந்த குருவே

அருட்பெருங்கடலே காஞ்சி மாமுனியே
அருட்செல்வம் அருள்வீர் அனைவர்க்கும் நீரே
அரும்பெரும் குணங்கள் அருள்வீர் என்றும்
அருந்தவ முனியே அருட்சிவ கனியே

அருமறை பொருளை அனைவர்க்கும் உணர்த்தி
அரும்பெரும் உரைகள் அன்றாடம் நிகழ்த்தி
அருளுரை பொழிந்தே ஆட்கொண்டீரே
அருள்ஞான சுடரே சிவஞான ஒளியே

## 2. மஹாஸ்வாமி மஹிமை கானம்

(ஓம் பூர்புவஸ்ஸுவஹ - மெட்டு)

ஹரஹர சங்கர சங்கரரே
ஜெயஜெய சங்கர சங்கரரே
காமகோடி வாஸ சங்கரரே
காமாக்ஷி தாஸ சங்கரரே

மஹாஸ்வாமியை நினைத்திடவே
மஹிமைகள் புரிந்தே ஆட்கொள்வார்
மஹாலிங்கமாய் அமர்ந்தருள்வார்
மஹா விந்தைகள் புரிந்தருள்வார்

மஹேஸ்வரனே வந்தாரே
மஹானுபாவராய் நடந்தாரே
மஹோன்னதம் பல புரிந்தாரே
மஹா உத்தமம் உரைத்தாரே



மஹேந்திர மங்கல கரையினிலே
மஹா தீபமாய் ஒளிர்ந்தாரே
மஹா வாக்கியம் உரைத்தாரே
மஹாமகக் கரை மக்களுக்கே

மஹாலிங்கம் உறை மருதூரில்
மஹா சிவனாய் ஜொலித்தாரே
மஹேசன் தேரை இழுத்தாரே
மஹிமைகள் பலவும் புரிந்தாரே

மஹா யாத்திரை பல செய்தே
மஹா சித்தராய் வலம் வந்தார்
மஹான்கள் போற்றும் மஹேசனாய்
மஹா மோகங்கள் அறுத்தாரே

மஹா சிவனாய் காட்சி தந்தே
மஹா பாபங்கள் தீர்த்தாரே
மஹா யோகியாய் பவனி வந்தே
மஹா யாகங்கள் பல செய்தார்

மஹா நடனம் புரிந்தவரே
மஹானாய் நடந்தார் மண்ணில்எங்கும்
மஹா சிவனே வந்தாரே
மஹானாய் வாழ்ந்து காட்டிடவே



மஹாஸ்வாமியை போற்றிடுவோம் - அவர்
மஹிமைகள் உலகில் பறைசாற்றுவோம்
மஹா மனித பிறப்பினையே
மஹோன்னதம் பெறச் செய்வோமே

மஹாபெரியவா திருப்பாதம்
மஹா லக்ஷன கற்பகமே
மஹா பாக்கியம் பெற்றிடுவோம்
மஹானின் திருப்பாதம் தொடர்ந்தே நாம்

## 3. சாந்தரூப சங்கரேஸ்வர சற்குரு கானம்

(அன்புவுருவம் ஆனவரே ராகவேந்திரா - மெட்டு)

சங்கரேஸ்வரா காஞ்சி சங்கரேஸ்வரா
மங்களங்கள் அருளிடும் மங்களேஸ்வரா

அற்புத பிறப்பெடுத்த ஆதி சிவனே
அற்புதங்கள் நிகழ்த்திய ஆதி குருவே
அற்புத குருபீடம் அமைத்த சங்கரா
அற்புதமாய் அமர்ந்தருளும் காஞ்சி சங்கரா

கற்பகமாய் அருள்புரியும் காருண்ய குருவே
கற்பனைக்கு எட்டாத அற்புத குருவே
கற்பூர ஒளியாக வாழ்வருள் வீரே
கற்பூர ஜோதியாய் பிறப்பறுப் பீரே

பொற்பதங்கள் காட்டிடும் பொன்னம்பலவா
பொற்பதத்தால் பார் அளந்த சிற்றம்பலவா
பொற்பாதம் பணிந்தோர்க்கு மஹாபெரியவா
பொற்காலம் அருள்வீரே பூ மனத்தவா

சிற்றம்பல பரம்பொருளே சிதம்பரேஸனே
சிற்றருவியாய் நகைத்தருளும் காஞ்சிவாஸனே
சிற்றின்ப சுழல் காப்பீர் சீல குருவே
சிற்றாராய் உமைசேர சீர்அருள் புரிவீர்

பற்றிடவே உன்பாதம் பரஞ்சோதியே
பற்றி நின்ற பாவம் போக்கும் அருள்ஜோதியே
பெற்றிட்ட இப்பிறப்பில் போற்றி மகிழவே
பெற்றிட்டோம் பெரும்பேறே சிவ ஜோதியே



## 4. பரப்பிரம்ம பரமாச்சர்யாள் கானம்

(ராகம் : ரேவதி    போ சம்போ - மெட்டு)



ஓம் சிவ ஓம் ஓம் சிவ ஓம்
ஓம் சிவ ஓம் ஓம் சிவ ஓம்
சம்போ சிவ சங்கர சர்வேஸ்வரா
சாம்ப சதா சிவ சங்கரேஸ்வரா

பரப்பிரம்ம ரூப பர்வத வாஸா
ஏகாம்பர சிவ காஞ்சி வாஸா
பர இக சுகம் பெற கரம் காட்டியருள்வீர்
பராபர குருவே பரமேஸ்வரனே

ஹரஹர சங்கர ஜெயஜெய சங்கர
ஜெயஜெய சங்கர ஹரஹர சங்கர

பாதங்கள் நோக நடந்திட்ட ஈஸா
வேதங்கள் காக்க வந்திட்ட ஈஸா
பாதகம் நீக்கி பக்குவம் அளிப்பீர்
பாதம் பணிந்தோம் பரமே ஸா..

## 5. கருக்கொண்டு வந்திட்ட கருவறை சிவகுரு கானம்

குருவே உன்பதம் பணிந்தோம் - திரு
கயிலாயம் உறையும் அருட் சிவ நாதராம்



அரு மறை போற்றும் ஆதி சிவனே
குரு உரு தாங்கி வந்திட்ட ஹரனே
திரு உரு பணிந்திட தீவினை நீக்கும்
குருபரம் பொருளே காஞ்சி மா முனியே

குருவாய் ஆலடி அமர்ந்திட்ட திருவே
குருபரம் பரையில் வந்திட்ட குருவே
திருவருள் பொழிந்தே தீர்ந்திட கவலை
குருவருள் பொழிவீர் காஞ்சி மா முனியே

கருக்கொண்டு வந்த கருவறை சிவனே
உருக்கொண்டு வந்த உத்தம ஹரனே
உருகண்டு உன்னதம் உணர்ந்தோம் குருவே
திருகண்டு திளைத்தோம் காஞ்சி மா முனியே

அருஉரு வான  ஆகாஸ லிங்கனே
குருஉருவாய் வந்த கூத்தாடும் சிவனே
ஒருவரம் அருள்வீர் ஓர்பிறப் பறுத்தே
பெருவரம் அருள்வீர் காஞ்சி மா முனியே



உருவில் லிங்கமாய் உறையும் சிவனே
கருவில் பிறந்திட்ட காருண்ய ஹரனே
தெருவெங்கும் தேர்போல் நடந்திட்ட திருவே
திருஓங்கும் தெய்வமே காஞ்சி மா முனியே

ஒருநிகர் இல்லா ஒப்பற்ற சிவனே
பெருநர் காசியில் அமர்ந்திட்ட ஹரனே
திருநகர் காஞ்சியில் திருமடம் கொண்டே
வருவோர்க் கருளும் காஞ்சி மா முனியே

அருவியாய் அருள்மழை பொழியும் சிவனே
கருவியாய் கண்காட்டி மகிழும் ஹரனே
பெருவியாதி போக்கி பேரின்பம் அளிக்க
கருவியாய் வந்திட்ட காஞ்சி மா முனியே

விருத்தனே ஒருத்தனே நர்த்தன சிவனே
கருத்தனே கார்முகில் சடைபொண்ட ஹரனே
குருந்தடி அமர்ந்திட்ட கருமா மணியே
பெருந்தடி ஏந்திட்ட காஞ்சி மா முனியே

விருந்தாய் விழிகளுள் உறையும் சிவனே
மருந்தாய் மனதை மாற்றும் ஹரனே
அருந்தவம் புரிய அத்வைத குருவாய்
பெருந்தவம் பூண்ட காஞ்சி மா முனியே

## 6. மாயா மலம் போக்கும் மா தவகுரு கானம்

மா மதுரை சுந்தரனே திருக்காஞ்சி குருநாதர்
மாதொரு பாகனாக மனம் அறிந்தே அருள்புரிவார்
மாயா மலம் போக்கிடவே... ஓயாமலே ஒளி பொழிவார் ...

மா தவம்செய்த மஹேசனே மண்ணில் எங்கும் நடந்தாரே
மா பாவம்செய்த மாந்தர்க்கும் மஹிமைகள் பல புரிந்தாரே
மா நிலத்தோர் பயன் பெறவே மானாய் துள்ளி திரிந்தாரே
மானாய் பாயும் மனம் அடக்க மஹா பக்தி தந்தாரே

மாலும் அயனும் அறியா ஒளியே
மா மலையாய் நின்ற பேரொளியே
மால் மருகன் பெயரில் மண்ணில் உதித்தார்
மாமுனியாய் மாந்தர் மனதில் நின்றார்

மாதவள் போற்றிய மாவடி சிவனே
மாதவம் புரிய உருக்கொண்டாரே
மாட வீதியில் உற்சவ சிலையாய்
மா நிலமெங்கும் நடந்தார் இவரே

## 7. கற்பகக் காஞ்சி மாமுனி கானம்
(செந்தமிழ் நாடெனும் போதினிலே - மெட்டு)

காஞ்சி மாநகர் செல்வோமே - நம்
கவலைகள் யாவையும் வெல்வோமே
காருண்ய மூர்த்தியை கண்டதுமே - மன
காரிருள் விலகி ஒளிபெறுமே

காமதேனுவாய் கொடுத்தருள்வார் - நாம்
கண்மூடி நினைத்திட்ட நொடியினிலே
காமாதி மலங்கள் அறுத்தெறிந்தே - நம் அகக்
கண் திறந்தே அருள்புரிவார்



கார்கால மேகமாய் அருள்பொழிந்தே - மன
கர்வத்தை கரைத்தே காத்தருள்வார்
காருண்ய பார்வையால் ஈர்த்தவரே - என்றும்
கருணையை பொழிவார் கற்கபமாய்

காற்றுரு கொண்டவர் வந்தருள்வார் - மனம்
கலங்கிடா தென்றும் காத்தருள்வார்
காடு மேடெங்கும் நடந்தவரே - நம்மை
கட்டுமரமாய் கரை சேர்ப்பார்

காரிருள் விலக்கும் சூரியனாய் - கண்ணின்
கதிரொளி பாய்ச்சியே நமக்கருள்வார்
கார்கால மேக வான் நிலவாய் - குளிர்
கண்களால் அருள்வார் திருக்காட்சியே

காவலாய் நின்றே நமை காப்பார் - பக்தி
கதைகள் அறிந்திட அருள்புரிவார்
காவியத் தலைவனாய் நெஞ்சில் நிற்பார் - நல்
கவிதையாய் மனதினில் சுகம் சேர்ப்பார்

காமகோடி பீட குருதீபம் - மணம்
கமழும் சந்தன சரித்திரமே
காமாக்ஷியாய் நம்மை காத்தருள்வார் - மணம்
கமழ்ந்திட வாழ்வினை தந்திடுவார்

கானல் நீர் வாழ்க்கை உணர்த்திடுவார் - காந்தக்
கண்களால் ஈர்த்தே காத்தருள்வார்
காலமெல்லாம் அவர்அடி பணிய - மனக்
கவலைகள் தீர்த்தே தேற்றிடுவார்

கால காலனே காம தஹனனே
கற்பக விருட்சமே மஹாஸ்வாமி
காலமெல்லாம் நம்மை காத்தருள்வார் - நம்
கவலைகள் போக்கி அருள்வாரே

## 8. பெருவழி காட்டும் குருவிழி மஹிமை கானம்

(அருண மலை குரு ரமணா - இளையராஜா பாடல் மெட்டு)

கருணை மலர் விழியாலே
அருளை தரும் மஹாஸ்வாமி
பொருளை போற்றும் உலகினிலே
அருளை தர வந்தவரே



குருவாய் உம்மை வரித்திடவே
வருவாய் துணையாய் காத்திடவே
திருவாய் மலர்ந் தருள்வீரே
குருவாய் அருள் பொழிவீரே

இருகை கூப்பி வணங்கிடவே
ஒருகை காட்டி அருள்வீரே
இருவிழி யால்உமை பார்த்திடவே
ஒருவழி யேகாட்டி அருள்வீரே

இருவிழியால் நீர் பார்த்திடவே
கருவழியும் அது அடைத்திடுமே
திருவிழியால் திறப்பீர் திகட்டாத
பெருவழியே வாழ்வில் பெற்றிடவே

ஒருநிகரே இல்லா ஓங்காரம்
திருநகரம் உறை சிங்காரம்
பெருநகரம் பல பார்த்தீரே
ஒரு சிகரமாய் உலகில் உயர்ந்தீரே

ஒருஅகரமாம் வேதம் வளர்த்தீரே
திரு ஆகமம் போற்றி வாழ்ந்தீரே
திருநகரேஷு காஞ்சி மஹாஸ்வாமி
பெரு நகரம் புக அருள்வீரே

## 9. நேர்த்தியாய் அருளும் நடமாடும் தெய்வ கானம்

(சுமனஸ வந்தித - அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்திர மெட்டு)

கார்த்திகை தீபம் கார்த்திகை தீபம்
கோர்த்து கை கூப்பி வணங்கியே மகிழ்வோம்
வார்த்தைகள் இன்றி பார்த்தே பார்வையால்
நேர்த்தியாய் அருள்வார் நம்மஹா ஸ்வாமியே

ஆர்த்து மகிழ்ந்திடும் அருவியைப் போல
தூர்த்து சிலிர்த்திடும் தூறலை போல
பார்த்ததும் மனதில் பரவசம் அடைவோம்
சேர்த்து கை கூப்பி சிரம் சாய்த்திடுவோம்



மூர்த்தியில் சிறியவர் கீர்த்தியில் பெரியவர்
வார்த்தையில் வல்லவர் நடத்தையில் தூயவர்
ஆரத்தி எடுத்து ஆராதனை செய்ய
பாரத்தை இறக்கி பரத்தை உணர்துவார்

சீர்திரு பாதம் சிவனின் பாதம்
ஓர்திரு முகமே அம்பிகை முகமே
பார்த்திட அறுப்பார் பிறப்பை அவரே
பார்த்து மகிழ்வோம் இப்பிறவியின் பயனாய்

## 10. உள்ளத்தில் குடிகொண்டருளும் உத்தமகுரு கானம்

உள்ளத்தில் நல்லொளியே உதித்துப் பெருகிடவே
வள்ளலை பணிவோமே - காஞ்சி
வள்ளலை சரண்புகுவோமே

தாய்க்கு நிகர் தயையோடு தந்தைசொல் வேதமாக
மாய கண்ணனாய் அருள்வார் மஹா ஸ்வாமி
மாயை போக்கி மலரச் செய்வார்

பார்புகழ் பரந்தாமன் பார்வதி பரமேஸன்
பார்த்த விழி பாவம் போக்கி - என்றென்றும்
பார்த்தனாய் கீதை உரைப்பார்

உள்ளத்தில் உறைந்தவரே உற்றதுணையாய் இருந்தே
வெள்ளித்தில் மீட்பார் நம்மை - வாழ்வில்/என்றும்
வேள்வியாய் வளரச் செய்வார்

நடமாடும் தெய்வமவர் நாடி வந்தோர்க் கருள்வார்
தடுமாற்றம் தன்னை போக்கி - வாழ்வில்
தடம் மாற்றி திடம் சேர்ப்பார்

வேதவழி காட்டி அவர் வேதனைகள் போக்கிடுவார்
பாதம் தன்னை பற்றிடவே - என்றென்றும்
பாதகங்கள் போக்கிடுவார்

சங்கர சற்குருவே தங்கியே மனதினிலே
தேங்கிய துயர் தீர்ப்பார் - என்றென்றும்
தீங்கின்றி நமை காப்பார்

## 11. பஞ்சாக்ஷர பரம குரு கானம்



ஓர்ஆலின் கீழ் அமர்ந்த ஒப்பற்ற சற்குருவே
ஓர் காலில் நின்றாடும் ஒப்பில்லா எம்சிவனே
ஓர் இருக்கை கொண்டீரே மனதில்
ஓரிக்கை அமர்ந்தருளும் மஹா ஸ்வாமியே

ஈரேழு லோகம் காக்கும் ஈசான மூர்த்தமே
ஈருடல் கொண்டருளும் அர்த்தநா ரீஸனே
ஈராறு கரத்தோனின் பெயர்கொண்டே
ஈரெட்டும் அருளவந்த மஹா ஸ்வாமியே

மூவிரு முகம்கொண்ட முக் கண் நாதனே
மூவாறு சித்தர் போற்றும் மூப்பில்லா ஈஸனே
முப்போதும் உமை பணிவோம் குருவே
முப்போதும் எமை காப்பீர் மஹா ஸ்வாமியே

நால்வேதம் போற்றிடும் வேதபு ரீஸனே
நான்முகன் மால் போற்றும் லிங்கோற்பவ சிவனே
நால்திசையும் நடந்திட்ட நடமாடும் தெய்வமே
நானிலமும் நடந்திட்ட நடைராஜ ஸ்வாமியே

ஐஐந்து முகம்கொண்ட கயிலை நாதனே
ஐந்தெழுத் தோதிட அருளும் எம் சிவனே
ஐயங்கள் களைந்திடவே வந்திட்ட குருவே
ஐவிரல் காட்டி(யே) அருள்வீர் மஹா ஸ்வாமியே

## 12. காஞ்சி குருநாதர் நாம மஹிமை கானம்

(அதிவோ அல் அதிவோ ஸ்ரீ ஹரி வாஸமு - மெட்டு)

குருநாதா குருநாதா உன் நாமமே - நான்
தினந்தோறும் நினைத்திட அருள் வேண்டுமே



திருக்காஞ்சி நகர்உறை திருக்கயிலை மலையே
குரு காஞ்சி முனியே பிந்தேன் உன் பதமே
நகர் காஞ்சி அமர்ந்த நட ராஜ குருவே - என்
அகத்தினில் அமர்ந்தருள்வீர் எந்நாளும் குருவே

திருவைந்தெழுத்தாய் திகட்டாத நாமம்
வரும்வழித் துணையாய் தினம் உந்தன் நாமம்
பெருவழி காட்டி பேரின்பம் சேர்க்கும்
கருவழி அடைத்தே காத்திடும் நாமம்

இருகண்ணின் ஒளியாய் வழிகாட்டும் நாமம்
திருகண்ணை திறந்தே ஒளிகூட்டும் நாமம்
இரு கைகள் கூப்பிட கை கொடுக்கும் நாமம்
இருக்கையில் மனதில் இதம்தரும் நாமம்

## 13. தச திசை தெய்வ மஹாஸ்வாமி கானம்

(அன்புருவம் ஆனவரே ராகவேந்திரா - மெட்டு)

மஹாஸ்வாமியே எங்கள் மஹாஸ்வாமியே
மஹாலிங்க ரூபனே மஹாஸ்வாமியே
மஹாஸ்வாமியே காஞ்சி மஹாஸ்வாமியே
மஹிமை பல புரிவாரே மஹாஸ்வாமியே

ஒரு முறையே தரிசிக்க மஹாஸ்வாமியே
ஒரு குறையும் வாராதே மஹாஸ்வாமியே
ஒரு இறையே உமைதொழுதோம் மஹாஸ்வாமியே
ஒரு நிறைவே வாழ்வில்பெற்றோம் மஹாஸ்வாமியே

இரு கரங்கள் கூப்பியே மஹாஸ்வாமியே
ஒரு  சிரமே சாய்த்தோமே மஹாஸ்வாமியே
இரு கண்ணால் பார்த்தே நீர் மஹாஸ்வாமியே
ஒரு வரமே அருள்வீரே மஹாஸ்வாமியே



மூன்று கண் கொண்டசிவனாய் மஹாஸ்வாமியே
இன்றுஉமை கண்டோமே மஹாஸ்வாமியே
மூன்று வேளை முழுமூச்சாய் மஹாஸ்வாமியே
என்றும் உம்மை பணிவோமே மஹாஸ்வாமியே

நால் வேதம் உரைப்போர்க்கு மஹாஸ்வாமியே
நாள்தோறும் ஜெபித்தீரே மஹாஸ்வாமியே
நால்வேதம் காத்திடுவோம் மஹாஸ்வாமியே
நாள்தோறும்உன் வழிநடப்போம் மஹாஸ்வாமியே

ஐந்தெழுத்தான் சிவனுருவே மஹாஸ்வாமியே
ஐந்தெழுத்தால் உமைதொழுவோம் மஹாஸ்வாமியே
பைந்தமிழால் பாடிமகிழ்வோம் மஹாஸ்வாமியே
மூவைந்தோ டொன்றருள்வீர் மஹாஸ்வாமியே

ஆறுமுகனின் பெயர்கொண்ட மஹாஸ்வாமியே
ஈராறு வயதினிலே மஹாஸ்வாமியே
ஓர் ஆற்றில் கலந்தீரே மஹாஸ்வாமியே
பேராற்றல் பொங்கிடவே மஹாஸ்வாமியே



ஏழ் கடலும் தாண்டியே மஹாஸ்வாமியே
ஈரேழு லோகமறிந்தீர் மஹாஸ்வாமியே
மூவேழு வயதினிலே மஹாஸ்வாமியே
பார்முழுதும் பவனி வந்தீர் மஹாஸ்வாமியே

அஷ்டமா சித்தி பெற்றீர் மஹாஸ்வாமியே
இஷ்ட சித்தி அளிப்பீரே மஹாஸ்வாமியே
நிஷ்டையாய் அமர்ந்தே நீர் மஹாஸ்வாமியே
குஷ்டமா நோய்தீர்த்தீர் மஹாஸ்வாமியே

நவகோள் நன்மைதர மஹாஸ்வாமியே
கோளறு பதிகம் தந்தீர் மஹாஸ்வாமியே
கோளாறை நீக்கியே மஹாஸ்வாமியே
வரலாறு படைத்தீரே மஹாஸ்வாமியே

தச அவதாரமாய் மஹாஸ்வாமியே
சதாபக்தர்க் கருள்புரிந்தீர் மஹாஸ்வாமியே
சத்சித் ஆனந்த மஹாஸ்வாமியே
சத கோடி நமஸ்காரம் மஹாஸ்வாமியே

## 14. தங்க புஷ்ப சங்கரசிவ கானம்

(பண்டு ரீத்தி கொலு வியவய்ய ராமா - மெட்டு)

கண்டுகொண்டேன் உம்மை காஞ்சி மா முனியே
கண்கள் பெற்ற பலனாய் கண்டேன் உந்தன் கண்கள்
கண்கள் பனிக்க நின்றேன் கண் கண்ட தெய்வமே



காம கோடி பீட நாம கோடி நாதா
வாம பாக தேவி குருவாய் வந்த திருவே
ராம நாம மாயுன் நாமம் சொல்ல நாளும்
தாமத மின்றி அருளும் தாயு மான தெய்வமே

லிங்க ரூப மாக தங்க புஷ்ப மாக
தங்கத் தேரில் அமர்ந்து திங்கள் ஒளியே அருள்வீர்
சங்கு சக்ர நாதா பொங்கும் இன்ப மருள்வீர்
செங்கமல கைகள் காட்டி சேவித்தோர்க்கருள் தெய்வமே

சந்திர சேகரேந்திர ம"ாஸ்வாமி உம்மை
வந்தனம் செய் துலகில் வாழ்ந்தே வெல்வோம் வினையை
சாந்த ரூப குருவே சந்ததம் உம்மை போற்ற
சந்திர ஒளியை அருளும் சுந்தர சிவ தெய்வமே

கந்தன் நாமம் கொண்ட ஸ்வாமி நாத ஸ்வாமி
எந்த நாளும் உம்மை நினைக்கும் வரமே அருள்வீர்
வந்தோம் காஞ்சி முனியே உந்தன் நிழலை நாடி
செந்தேன் இன்பம் தந்தே சேவிப் போர்க் கருள் தெய்வமே

## 15. குஞ்சித பாத சங்கர அக்ஷர மாலை

(ஒவ்வொரு அடி இறுதியிலும் குஞ்சித பாத சங்கரனே போற்றி போற்றி என சேர்த்து சொல்லி சேவடி பணிவீர்)

அஞ்ஞான இருள் நீக்கும் ஆதி ஞான சுடரே குஞ்சித பாத சங்கரனே போற்றி போற்றி
ஆனந்த வாழ்வு பெற இன்னல்கள் களைந்தருளும்
இகபர சுகமருளும் ஈஸ்வரனே
ஈர்த்தாட்கொண் டருளும் உன்னத சற்குருவே
உற்ற துணையாய் உள்ளத்தில் உறைய ஊர்தோறும் வலம் வந்த
ஊறிட பக்திச் சுடரே எண்ணெயாய் என்றும் அருளும்
எத்திக்கும் காத்தருள ஏகம்பன் நிழல்அமர்ந்த
ஏற்றங்கள் மனதினில் அருளும் திரு ஐந்தெழுத்தோனே
ஐயங்கள் போக்கி அருள் ஒப்பற்ற ஒளிச் சுடரே
ஒப்பற்ற ஜீவன்முக்தியை ஓர்நொடியில் அருள்பவரே

ஓடிவந்தோர்க் கருள்வீரே ஔஷதமாய் என்றென்றும்
ஔஷதப் பார்வையால் அஃறிணைக்கும் அருள்பவரே

கமலத் திருமுகத்தால் காருண்யம் காட்டியருள்
காலடி உதித்த கற்பகமே கிடைத்தற்கரிய அற்புதமே
கிள்ளை மொழி பேசி கிறங்கச் செய்த கீர்த்தி வாசனே
கீதாச்சாரத்தை உணர்த்த குருவடிவில் வந்திட்ட
குற்றங்கள் பொறுத்தருளி கூடிடச் செய்வாய் நற்பலனே
கூப்பி கை தொழுதோரின் கெட்ட காலம் விரட்டிடும்
கெட்ட மனம் விட்டோர்க்கு கேடின்றி வாழ்வருளும்
கேட்கும் முன்னே கொடுத்தருளும் கைவல்ய நாதனே
கைகுவித்து சரண்புகவே கொட்டும் மழையாய் வரமருளும்
கொண்ட பக்திக்கு என்றென்றும் கோடிவரம் கொடுத்தருளும்
கோடி சந்திர பிரகாசனே கௌரி மனோகரனே
கௌபீன தாரியே கச்சி ஏகம்ப சந்திரசேகரனே

சந்திர சேகர சாந்த சற்குருவே
சார்ந்தோர்க்கருள் சின்மய ரூபனே
சிற்றறிவில் உறைந்தென்றும் சீரருள்புரிவீரே
சீர் காஞ்சி அமர்ந்தருள் சுந்தர குரு முனியே
சுற்றி வரும் வினைவிரட்டி சூழ்துன்பம் போக்கிடும்
சூழ் இருள் விலக்கிடும் செஞ்ஞாயிறு விழியோனே
செப்பி தினம் உன்நாமம் சேவடி பணிந்தோம்
சேயாய் எமை காத்தருள் ஸ்ரீ சைலமுறை ஈஸ்வரனே
சைதன்ய நாயகரே சொல்லில் அடங்கா சரித்திரமே
சொல்லிடவே உன்நாமம் சோகங்கள் தீர்ப்பவரே
சோர்ந்தோர்க்கருள் சௌந்தர்ய சந்திரனே
சௌக்கியமாய் வாழவைப்பீர் சந்திர சேகரரே


குஞ்சித சங்கர த்யானம்
சர்வ ரோஹ நிவாரணம்


காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள்
தபோவனம் - கோவிந்தபுரம்

# காஞ்சி மஹாஸ்வாமிகள் தபோவனம்

காஞ்சி மஹாஸ்வாமிகள், தாம் சூக்ஷமமாக இருந்து நம் எல்லோருக்கும் அருள்பாலிக்க, மிகவும் புனிதமன மத்தியார்ஜுன க்ஷேத்திரமான திருவிடைமருதூரை அடுத்த கோவிந்தபுரத்தை (ஸ்ரீ காமகோடி பீடத்தின் ஐம்பத்து ஒன்பதாவது ஆச்சார்யரான ஸ்ரீ பகவன்நாம போதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஐக்கியமான தலத்தை) தேர்ந்தெடுத்து தனக்கு முந்தைய 67 குருமார்களுக்கு இடையில் அமர்ந்து அருள்பாலிக்கின்றார். இவ்வரிய திருக்காட்சியை வேறு எங்கும் காண இயலாது.

இந்த தபோவனத்தில் ஸ்ரீ ஆதிசங்கரர் மற்றும் நர்மதா பாண லிங்க ஸ்வரூபமாக 67 குருமார்களும் அமர்ந்து அருள்பாலிக்க இடையில் மஹாஸ்வாமிகள் தவக்கோலத்தில் அமர்ந்துள்ளார்கள். மஹாஸ்வாமிகளின் மூல விக்கிரஹம் கணபதி ஸ்தபதி அவர்களால் பச்சைக் கல்லால் உருவாக்கப்பட்டுள்ளது, இத்தபோவனம் உருவாகக் காரணமான சிட்லபாக்கம் காமாட்சி மாமியை (பெருங்களத்தூர் காமாக்ஷி கோவிலை மஹாஸ்வாமிகளின் ஆசியால் கட்டியவர்- மஹாஸ்வாமிகள் பூஜித்த பாண லிங்கத்தை அக்கோவிலில் காமேஸ்வரராக தரிசிக்கலாம்) ஆட்கொண்ட விதமும் , இத்திருக்கோயில் உருவாக ஒவ்வொரு விஷயமும் நடந்தேறிய விதங்களும் கேட்கக் கேட்க திகட்டாதவை, மெய் சிலிர்க்கச் செய்பவை.

இங்கு அமையப்பெற்றுள்ள கோசாலையும் (பசுமாடுகள் மொசைக் தரையில் நடந்தால் வழுக்கி விடும் என்று மஹாஸ்வாமிகள் கனவில் கூறி அதை மாற்றச் செய்துள்ளார்), மஹாஸ்வாமிகளின் உற்சவ விக்கரக மூர்த்தி, வியாச கணபதி, காமாக்ஷி , தக்ஷிண காளி ஆகிய சன்னதிகளை தரிசிக்க தரிசிக்க ஒரு தியான நிலையில் மனம் அடங்குவதை உணர முடியும்.

இங்கு வருடம் முழுவதும் பல சிறப்பு பூஜைகள் மஹாஸ்வாமிகளின் வழிகாட்டுதலின்படி நடைபெற்று வருகின்றது. நமது குருமார்கள் 68 பேரும் ஒருசேர அமர்ந்து அருள்பாலிக்கும் இப்புண்ணிய க்ஷேத்திரத்தில் நமது குடும்ப அங்கத்தினர்களின் க்ஷேம நலனிற்கு சங்கல்பம் செய்து கொண்டு நித்ய பிக்ஷாவந்தன பூஜைகளில் கலந்து கொண்டு இப்பிறவிப் பயன் பெறலாம். சமயம் வாய்க்கும் போது ஒரு முறை தரிசித்து வாருங்கள். காமாட்சி மாமியிடம் இன்றும் மஹாபெரியவாள் பேசும் அதிசயத்தை அறிய சிலிர்ப்பான அனுபவமாக இருக்கும்.

நித்ய பிக்ஷவாந்தன கட்டளைக்கான தங்கள் நன்கொடைகளை அனுப்ப தொடர்பு கொள்ளவும் :

**Mr. PARTHASARATHY – 98412 65785, Mr. SANTHANAM – 94451 57748**

***Cheque to be drawn in favour of:***

KANCHI SRI MAHASWAMY BIKSHAVANDANA TRUST

***Also visit:https://mahaperiyavaa.wordpress.com/tag/govindapuram***

தேனம்பாக்கம் - மஹாபெரியவா சன்னதி



வேடல் - மஹாபெரியவா பொருட்காட்சி

## மஹாபெரியவா - 100 அடி ஸ்தூபி தங்க மண்டபம்



## மஹாபெரியவா மணிமண்டபம் ஓரிக்கை



மஹாஸ்வாமிகள் தவமியற்றிய தனியறையை சின்ன காஞ்சிபுரம் அருகில் உள்ள தேனம்பாக்கம் சிவாஸ்தானம் சிவாலயத்திலும்

மஹாஸ்வாமிகள் பயன்படுத்திய பொருட்கள் எனும் பொக்கிஷங்களை பெங்களூர் சாலையில் காஞ்சிபுரம் அருகில் வெள்ளை கேட் பகுதியில் உள்ள வேடல் தலத்திலும்

மஹாஸ்வாமிகளின் புன்னகை தவழும் பொன் முகத்தை காஞ்சி சங்கர மடத்திற்கு எதிர் புறம் சற்று மேற்கில் உள்ள 100 அடி ஸ்தூபி மண்டபத்திலும்

மஹாஸ்வாமிகளின் மஹிமைகளை சந்திர சூரியர் உள்ள வரை உலகிற்குணர்த்த பல சிற்ப அதிசயங்களுடன் காஞ்சி - உத்திரமேரூர் சாலையில் பாலாற்றின் கரையில் ஓரிக்கையில் கட்டப்பட்டுள்ள மணி மண்டபத்தையும்

தவறாது கண்டு களிப்பீர். . .

மஹாஸ்வாமிகள் 100 ஆண்டுகள் மிகுந்த பிரயாசையுடன் வேத சம்ரக்ஷணத்தை மேற்கொண்டார். நாமும் நமது சந்ததியினரும் இக்கலி காலத்தில் பல இன்னல்களுக்கு ஆளாகாமல் இருக்க லோக க்ஷேமத்திற்காக வேதம் ஓதி, வேதம் பயிற்றுவித்து சனாதன தர்மத்தை நிலைநிறுத்திக் கொண்டிருக்கும் வேத பாடசாலைகளுக்கு நமது வருமானத்தில் குறைந்த பட்சம் ஒரே ஒரு சதவீதத்தையேனும் மாதந்தோறும் அளிப்போம் என்று மனதில் உறுதி கொள்வோம்.

மஹாஸ்வாமிகளின் ஆக்ஞையை நிறைவேற்றுவோம் . . .
மஹாஸ்வாமிகளின் ஆசிகளை பெறுவோம் . . .
மஹாஸ்வாமிகளின் நிழலில் நிம்மதியாக வாழ்வோம் . . .

## 16. பாதாரவிந்த பரமானந்த கானம்



குருவே உந்தன் பாதார விந்தம்
தருமே என்றும் ஆனந்தம்

ஒருநொடி உன்பெயர் நினைத்திடவே
மறுநொடி மனம்பெறும் மஹோன்னதமே
ஒரு முறை உன்நாமம் சொல்லிடவே
வரும்நாள் எல்லாம் வசந்தங்களே. . .

குருவே உந்தன் அதிஷ்டானம்
தருமே வாழ்வில் தைரியமே
திருவே உந்தன் திருக்கரமே
தருமே வாழ்வில் பெருவரமே. . .

இருவிழி மூடி உனை துதிக்க
ஒருவழி காட்டியே குறைதீர்ப்பீர்
இருவிழி பார்வையால் இருள்தனை அகற்றி
பெருவழி சேர்ப்பீர் பெம்மானே. . .

## 17. ஜகம்புகழும் ஜகத்குரு கானம்

(நாதர் முடி மேல் இருக்கும் - மெட்டு)

ஹரஹர சங்கர சற்குருவே திரு
காஞ்சி அமர்ந்த மஹாஸ்வாமியே
ஜெயஜெய சங்கர ஜெகத் குருவே என்றும்
ஜெயம் தரும் எங்கள் மஹாஸ்வாமியே

பாதம்தன்னை பற்றிடநற் பதம்அளிக்கும் - திரு
பாதம் தன்னை பணிவோம் காஞ்சியிலே
பாதகங்கள் இன்றிநம் மனம் மிளிர - திரு
பாத கமலங்கள் பணிவோமே



கீதங்கள் பாடியே மகிழ்வோமே - நல்
சங்கீத மாய் மனம் மாறிடுமே
சேதங்கள் இன்றியே சீர்செய்வார் - மன
சஞ்சலங்கள் போக்கி மஹாஸ்வாமி

வேதங்கள் தந்திட்ட வேள்வீஸன் - நம்
வேதனையை தீர்த்தருள்வார் வேல் விழியால்
வேதமாய் அவர் நாமம் தினம் உரைக்க - நம்
வேதனையின் வேரறுத்து வரமருள்வார்

## 18. காஞ்சியில் அருள் கயிலைசிவ குரு கானம்

சங்கர குருவே சங்கர குருவே மஹாஸ்வாமி - அருள்
பொங்கும் திருமுக தரிசனமே பெறவந்தேன்

கருணையுடன் அருட் பார்வை பார்த்தே அருள்வீரே
அருணைதீப ஒளியாய் கண்டு மகிழ்வேனே
கருணை கடலே மஹாஸ்வாமி
அருளை பொழிவீர் என்றென்றும்
பொருளை நான் வேண்டேன் - உன்
அருளை நாடி நின்றேன் ( சங்கர குருவே)



கயிலை மலை தவத்திரு உருவே சர்வேஸா
எழிலுருவாய் காஞ்சியில் அமர்ந்தருள் கருணேஸா
வலக்கை காட்டி வாழ்த்திடுவீர்
வாழ்க்கை பாதை மாற்றிடுவீர்
திரு கை மறவேனே - உன்னருட்
பெருக்கை உணர்ந்தேனே (சங்கர குருவே)

புன்னகையால் முப்புரம் எரித்த முக்கண்ணனே - அருள்
புன்னகையால் முப்போதும் காக்கும் தீவண்ணனே
கன்னச் சிரிப்பில் நொடியினிலே
முன்ஜென்ம வினைதீர்த் தருள்வீரே
வண்ணச் சிரிப்பழகில் - நான்
என்னை மறந்தேன் (சங்கர குருவே)

## 19. சந்திர சேகர சற்குரு தரிசன கானம்

(கொண்டலோ நெலகுன்ன கோனேட்டி ராயடு வாடு - மெட்டு)

வந்துன்னை பணிந்திடவே வந்திடுமே வசந்தமே
செந்தனல் சிவ குருவே சந்திர சேகரரே

காலடியில் பிறந்திட்ட ஆலடி சிவகுருவே
கழல்தனை பணிவோர்க்கருள் கற்பகத் தருவே
காஞ்சியில் அமர்ந்தருள் காருண்ய குருவே
கற்பகமாய் அற்புதம் புரிந்தருள் திருவே

சாத்திரங்கள் போற்றுகின்ற சத்திய திருவே
சத்திய வழி நடந்த உத்தம குருவே
சாமகாண ப்ரியனே சங்கர குருவே
சம்ஸார கடல் கடக்க அருளும் குருவே

மாமலை வாஸனே அருணா சலனே
மஹாலிங்க ரூபனே மருதூர் ஈஸனே
மாநகர் காஞ்சியில் மாவடி அமர்ந் தவனே
மஹிமைகள் புரிந்தருளும் மஹா ஸ்வாமியே

காண கண்கோடி வேண்டும் சிவஞான உருவே
கண்டம் நீலமான சிவபரஞ் சோதி திருவே
தாண்டவம் ஆடிஅருள் நடராஜ உருவே
தண்டம் ஏந்திவந்த மஹாஸ்வாமி குருவே

## 20. காஞ்சி காமகோடி குரு சரண கானம்

(புனரபி ஜனனம் புனரபி மரணம் - மெட்டு)

சரணம் சரணம் சங்கர குருவே
சரணம் சரணம் சாந்தரூப குருவே
சரணம் சரணம் காஞ்சி குருவே
சரணம் சரணம் காமகோடி குருவே

சரணம் சரணம் அத்வைத குருவே
சரணம் சரணம் ஆதிஞான குருவே
சரணம் சரணம் இதம்தரும் திருவே
சரணம் சரணம் ஈஸனின் உருவே
சரணம் சரணம் உற்சவ திருவே
சரணம் சரணம் ஊர்த்துவன் உருவே
சரணம் சரணம் எங்கள் குருவே
சரணம் சரணம் ஏகாந்த உருவே
சரணம் சரணம் ஐயனே சரணம்
சரணம் சரணம் ஒருவனே சரணம்
சரணம் சரணம் ஓர்நாமம் சரணம்
சரணம் சரணம் ஔஷதா சரணம்

சரணம் சரணம் கற்பக ஈஸா
சரணம் சரணம் காருண்ய நேஸா
சரணம் சரணம் கிருபா புரீஸா
சரணம் சரணம் கீர்த்தி நிவாஸா
சரணம் சரணம் கும்பேஸ்வரனே
சரணம் சரணம் கூர்மேஸ்வரனே
சரணம் சரணம் கெடிலேஸ்வரனே
சரணம் சரணம் கேதாரீஸனே



சரணம் சரணம் கைலாஸ நாதா
சரணம் சரணம் கொடுமுடி நாதா
சரணம் சரணம் கோகர்ண நாதா
சரணம் சரணம் கௌரி நாதா

சரணம் சரணம் சங்கரனுருவே
சரணம் சரணம் சனாதன திருவே
சரணம் சரணம் சின்மய உருவே
சரணம் சரணம் சீலம்மிகு குருவே
சரணம் சரணம் சுந்தர குருவே
சரணம் சரணம் சூக்ஷ்ம குருவே
சரணம் சரணம் செங்கமல பதமே
சரணம் சரணம் சேவிப்போம் நிதமே
சரணம் சரணம் சைலேஸ்வரனே
சரணம் சரணம் சொக்கநாத சிவனே
சரணம் சரணம் சோமநாத ஈஸனே
சரணம் சரணம் சௌந்தர்ய ஹரனே





சரணம் சரணம் தண்ட பாணியே
சரணம் சரணம் தாண்டவ ஞானியே
சரணம் சரணம் திருவருட் கனியே
சரணம் சரணம் தீச்சுடர் முனியே
சரணம் சரணம் துக்கபாப ஹரனே
சரணம் சரணம் தூயநிர் மலனே
சரணம் சரணம் தெவிட்டாத பரமே
சரணம் சரணம் தேடி வந்த சிவமே
சரணம் சரணம் தைவத மனமே
சரணம் சரணம் தொல்தமிழ் சிவமே
சரணம் சரணம் தோணியாய் குணமே
சரணம் சரணம் திரௌபதி கண்ணனே



## 21. விடை வாகன விஸ்வேஸ்வர குரு கானம்

கடைக்கண் பார்வையால் அருள்வீர் குருவே
விடைகாணும் என்மனதின் வினாக்கள் பலவே
மடைதிறந்த வெள்ளமாய் அருள்வீர் குருவே
விடை அறிந்து நானும் வியப்புற குருவே

தடைபல தாண்டியே தெண்டனிட்டேன் குருவே
தடையின்றி காத்தருள்வீர் தண்டமேந்தி குருவே
தடைகள் இனி குறக்கிடாதே தடைசெய்வீர் குருவே
தடை செய்வீர் பிறப்புமே தந்தே முக்தி குருவே

இடைமருதூர் உறை மஹாலிங்க குருவே
இடைவிடாது பொழிந்தருள்வீர் இன்னருள் குருவே
இடையில் வந்த சிற்றின்பம் சிதைத்து குருவே
இடையறாது பேரின்பம் பொழிவீர் குருவே

கிடைத்திட்ட இப்பிறப்பில் விடைதேடி குருவே
கிடைத்திடச் செய்வீரே கீர்த்திகள் பலவே
கிடைத்திட்ட இப்பிறப்பில் கிடைத்திட்ட குருவே
கடைத்தேற்றி அருள்வீரே காமகோடி குருவே



படைத்திட்ட பிரம்மனாய் அருள்வீர் குருவே
படைப்பின் ரகசிய பிரம்மம் குருவே
படைத்திட பொருளின்றி (பரி) தவித்தேன் குருவே
படைப்பேன் இப்பிறப்பை உமக்கே குருவே

நடையாய் நடந்தேன் நாடெங்கும் குருவே
விடையாய் வினாக்களே விரைந்தன குருவே
குடையாய் குளிர்தந்து அருள்வீர் குருவே
விடைவாகனனாய் வந்திங்கு குருவே

ஓடையாய் என் வாழ்வே ஓடிட குருவே - குளிர்
ஓடைப் பார்வையால் அருள்வீர் குருவே
ஒட்டையின்றி ஓட்டிட வாழ்வை குருவே
ஓடையாய் கடல்சேர அருள்வீர் குருவே

## 22. திருவருள் பொழியும் குருஅருள் கானம்

(நிழலாக வரவேண்டும் முருகா - மெட்டு)

நிழலாக வர வேண்டும் குருவே - எந்தன்
நிழல் கூட தவறேதும் செய்யாமல் காக்க
நிழலாக வரவேண்டும் குருவே

குழந்தைபோல் உன் மடியில் ஏற்று - ஞானப்
பழம் தந்து அருள்வீரே எந்நாளும் குருவே

அழும் போது அணைத்திடும் தாய்போல் - நான்
விழும் போது எனைதாங்கி அருள்வீரே குருவே
சூழும் இருள் நீக்கி எந்தன் வாழ்வில் - நல்
முழு மதியாய் முகம் காட்டி அருள்வீரே குருவே (நிழலாக)

பழுதான சக்கரமாய் வாழ்வில் - தினம்
அழுதாலும் தீராத குறையோடு வாழ்ந்தேன்
முழுதாக உனை நம்பி நானே - தினம்
தொழுவேனே துயர் தீர்த்து அருள்வீரே குருவே (நிழலாக)

எழும் ஞாயிறாய் உன்பார்வை பெறவே - தினம்
முழு மூச்சோ டுனைபணிவேன் முப்போதும் குருவே
தொழுதிடவும் தயை புரிந் தருள்வீர் - உமை
ஏழேழு பிறப்பிலும் மறவாத வரமருள்வீர் (நிழலாக)

## ப்ராதஸ்மரண பூர்வக கராவலம்ப ஸ்தோத்திரம்

ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்திரம், ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய கராவலம்ப ஸ்தோத்திரம் முதலியவை மிகவும் பிரசித்தமானவை. அதே போல் ஆசார்ய பக்த ஸ்ரேஷ்டரான ஹஸரஸ கவி" ஸ்ரீ லக்ஷ்மீகாந்த சர்மா நமது பரமாச்சார்யாளின் மேல் பாடியிருக்கிறார்கள். ப்ராதஸ்மரணிய மஹா புருஷர்களான ஸ்ரீ ஆசார்யரை காலையில் ஸ்மரித்து இந்த ஸ்தோத்திரத்தை சொல்வது மிக்க மிக்க க்ஷேமகரம்.

**ப்ராதஸ்மராமி பவதீய முகாரவிந்தம்**
**மந்தஸ்மிதம் ச ஜனிதாபஹரம் ஜனானாம்**
**சம்பத்கரீம் ச பவதோத்ர கடாக்ஷலக்ஷ்மீம்**
**காஞ்சீ மடேச மம தேஹி கராவலம்பம்**

திருமுகத்தின் அழகு பவத்தை நீக்கும். குறுநகை பிறந்திட மக்களின் பிறவிப் பிணி தீர்ந்து விடும். அருள்விழிப் பார்வையாலே பவ வினை ஒழிந்து செல்வத்தை அருளும். இந்தக் குணாதிசயங்கள் நிறைந்த காஞ்சி மடத்தின் அதிபதியை காலையிலே நினைத்துத் துதிக்கின்றேன், என்னை கை தூக்கி அருளுமாறு வேண்டுகிறேன்.

**ப்ராதஸ்மராமி கலிதோஷ ஹராணி யாணி**
**ஹ்ருத்யானி த்வய மதுராணி மனோஹராணி**
**வாக்யானி தேத்ய வதனாம் புஜ நிர்கதானி**
**காஞ்சீ மடேச மம தேஹி கராவலம்பம்**

கலிதோஷத்தை நீக்குபவரே! அருளிதயம் கொண்டு, அங்கிருந்து பிறக்கும் தங்கள் தேமதுரமான வாக்கின் மூலம் எங்கள் இதயத்தை மலரச் செய்பவரே! கதியற்றவரை தாமரை போன்ற அருள் விழிகளால் கடைத்தேற்றுபவரே! காஞ்சி மடத்தின் அதிபதியே காலையிலே நினைத்துத் துதிக்கின்றேன். கை தூக்கி எனக்கருளுங்கள்.

**வக்ஷஸ்தலம் விமலஹேம சமான வர்ணம்**
**பஸ்மாங்கிதம் ஜனமனோஹர குங்குமார்தம்**
**ப்ராதஸ்மராமி பவதோத்ர சிரம் மஹாத்மன்**
**காஞ்சீ மடேச மம தேஹி கராவலம்பம்**

கலப்படமற்ற தங்கத்தைப் போன்ற பொன்னிறமான திருமார்பு முழுவதும் திருவெணீற்றாலும், குங்குமத்தாலும் பூசி(பார்க்கின்ற) ஜனங்களின் மனதை இனிமையாக்குபவரே! எனது பவ வினை தீர்ந்து என்னை மேலுயர்த்திச் செல்லக் காலையிலே நினைத்துத் துதிக்கின்றேன். காஞ்சி மடத்தின் அதிபதியே !கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

**மத்தேவ துல்ய கமனம் ச நிரீஷ்ய தேத்ய**
**யாத்வா வனாந்தர மனந்த கஜாச்சலீன:**
**ப்ராதஸ்மராமி கஜராஜ கதிம் தவேதம்**
**காஞ்சீ மடேச மமதேஹி கராவலம்பம்**

நடையிலும், கூரிய பார்வையிலும், வனங்களில் திரிவதிலும் மத்தகஜத்தை ஒத்தவரே! கஜ ராஜனுக்கு நற்கதி அளித்தது போல எனக்கும் நல்கிட, காலையிலே நினைத்துத் துதிக்கின்றேன். காஞ்சி மடத்தின் அதிபதியே! கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

**தக்ஷேண தண்ட மவலப்ய ஸதைத்யரேண:**
**ஹஸ்தேன சாரு கலசம் ச விராஜ மானாம்**
**ரக்தாம்பரம் ச தவசாரு கடீஸ்மராமி**
**காஞ்சீ மடேச மமதேஹி கராவலம்பம்**

வலக்கரத்தில் தண்டமும், இடக் கரத்தில் கமண்டலத்தையும் தாங்கி, ஒளிர்கின்ற ரக்த வர்ண மேலாடையை அணிந்து நிற்கும் திருக்கோலத்தை நினைத்துத் துதிக்கின்றேன். காஞ்சி மடத்தின் அதிபதியே! கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

**விஸ்ம்ருத்ய தோஷமகிலம் ச மமாப்ராதும்**
**த்ராதும் ச யாத்ய பகவன் க்ருதபத்த தீக்ஷா:**
**ப்ராதஸ்மராமி யதிபுங்கவ தேனுகாம்பாம்**
**காஞ்சீ மடேச மமதேஹி கராவலம்பம்**

குறைகளை, தோஷங்களை எல்லாம் மறப்பவரே! குற்றங்களை எல்லாம் மன்னிப்பவரே! அனைத்தையும் பொறுத்து பக்தர்களுக்கு அருட்பார்வை அளிக்கின்ற பகவானே! அருட்பாலைப் பொழிகின்ற உத்தமமான பசுவைப் போன்றவரே! காஞ்சி மடத்தின் அதிபதியே! கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

ப்ராதஸ்மராமி பவதீய பாதாரவிந்தம்
யஸ்மாத் ப்ரயாந்தி துரிதாணி மஹாந்தி தாணி
ஆயாந்தி தாணி முஹரத்ய சுமங்களானி
காஞ்சீ மடேச மம தேஹி கராவலம்பம்.

எந்த மஹானுடைய திவ்ய சரணா விந்தங்களைத் துதித்தால், அனைத்து விதமான மஹா துன்பங்களும் ஓடி விடுமோ, ஸர்வ மங்களங்களும் தேடி ஓடி வருமோ, அத்தகைய பெருமை வாய்ந்த காஞ்சி மடத்தின் அதிபதியே! கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

ஸ்னானாச்ச பானாச்ச நிஷேவனாச்ச
த்யானாச்ச பாபநி லயம் ப்ரயாந்தி
ஹே தீர்த்த பாதானுஸவம் பதம் தே
தீர்த்தம் ச தீர்த்திகரணம் பஜாமி
காஞ்சீ மடேச மம தேஹி கராவலம்பம்

குளிக்கும் போதும், உண்ணும்(குடிக்கும்) போதும், தனியே துதிக்கும் போதும், தியானம் புரியும் போதும். (எந்த) தீர்த்தபாதரை நினைத்துத் துதித்தால் ஸர்வ பாவங்களும் விலகி ஓடிவிடுமோ, (அவரை நினைத்து) ஸர்வ பதம் தந்தருள்க என வேண்டி, நல்வழி காட்டுக என இந்தத் தீர்த்தத்தால் துதிக்கிறேன் காஞ்சி மடத்தின் அதிபதியே! கை தூக்கி எனக்கு அருளுங்கள்.

அனுதினமும் இந்த அற்புத கராவலம்ப ஸ்தோத்திரத்தை பாராயணம் செய்து மஹாஸ்வாமிகளின் அருள் பெற்றுய்வோம்.



# ஜகத்குரு ஜயேந்திர குரு கானம்
(ரகுபதி ராகவ ராஜாராம் - மெட்டு)

ஜெகம்புகழ் ஜகத்குரு ஜயேந்திரா
ஜெகம் காக்கும் சற்குரு ஜயேந்திரா
ஜெகதா னந்தரே ஜயேந்திரா
ஜெகந்நாத ரூபனே ஜயேந்திரா
ஜெகத் ரட்சகரே ஜயேந்திரா
ஜெகதாம் பிகையே ஜயேந்திரா



ஜய வருடத்தில் ஜயேந்திரா
ஜகத்குரு வானீர் ஜயேந்திரா
ஜெயம் பெற ஜெகமே ஜயேந்திரா
ஜெய நாமம் ஏற்றிட்ட ஜயேந்திரா
ஜெயம் அருள் சற்குரு ஜயேந்திரா
ஜயஜய சங்கர ஜயேந்திரா

பஜனை செய்திட ஜயேந்திரா
ஜெயம் அருள்வீரே ஜயேந்திரா
விஜயம் செய்தீர் ஜயேந்திரா -இச்
ஜெகம் எங்கும் நீரே ஜயேந்திரா
ஜயஜய சங்கர ஜயேந்திரா
ஜயமங் களகுரு ஜயேந்திரா



ஹரஹர சங்கர ஜயேந்திரா
ஜயஜய சங்கர ஜயேந்திரா
சம்போ சங்கர ஜயேந்திரா
சாம்ப சதாசிவ ஜயேந்திரா
காஞ்சி சங்கர ஜயேந்திரா
காமகோடி சங்கர ஜயேந்திரா







## பால (சிவ சங்கர) பெரியவா கானம்



பால சிவ சங்கரா பால சிவ சங்கரா
கோல விழிகாட்டியருள் பால சிவ சங்கரா

கோல மாகுரு முனி ஆதிசிவ சங்கரா
பாலமாய் அமர்ந்தருள் பால சிவ சங்கரா
ஆலாலம் உண்ட எங்கள் ஆதிசிவ சங்கரா
பாலாற்றின் கரை அமர் பால சிவ சங்கரா

காலடியில் பிறந்திட்ட ஆதி குரு சங்கரா
கலவையில் உதித்திட்ட ஜோதி குரு சங்கரா
காலடியை தொடர்ந்திட்ட கோலகுரு சங்கரா
காலடியை பணிந்தோமே காத்தருள் சங்கரா

மாலவன் போற்றிய பால சிவ முருகனாய்
ஞாலம் புகழ் ஞான குரு பால சிவ சங்கரா
வேலவனாய் காத்தருள் வேல் விழியால் சங்கரா
காவலனாய் காலமெல்லாம் பால சிவ சங்கரா



மாலவனாய் காத்தருள் மோன சிவ சங்கரா
பகலவனாய் இருள் போக்கும் பரசிவ சங்கரா
அகலாமல் அமர்ந்தருள் நெஞ்சிலென்றும் சங்கரா
புகல் ஏது எங்களுக்கே உனையன்றி சங்கரா

சீல திருக்காஞ்சியில் ஞான குரு நிழலினில்
கோல உரு கொண்டருள் கோபால சங்கரா
நீலகண்ட னாகளங்கள் ஆலால குணம் போக்கி
நீலமயில் வாகனனாய் காட்சி தரும் சங்கரா



## நோயற்ற வாழ்விற்கு மஹாபெரியவா அருளிய மந்திரம்

மக்களின் துயர் தீர்க்க மனிதருள் மனிதராக அவதாரம் எடுத்து வந்த மஹேசனான மஹாபெரியவா தினமும் அதிகாலையில் மக்களின் நலத்திற்காக சர்வ ஜன க்ஷேமத்தை வேண்டும் பிரார்த்தனை ஸ்லோகத்தை மனதார சொல்லிக் கொண்டிருப்பார். என்றேனும் ஒருநாள் தான் மகானின் வாய்விட்டு அந்த ஸ்லோகம் அருகிலிருப்பவர் காதுகளில் கேட்கும். அப்படி ஒரு நாள் நடமாடும் தெய்வம் வாய்விட்ட கூறிய ஸ்லோகத்தை கேட்க நேர்ந்த ஒரு சேவார்த்தி அந்த ஸ்லோகத்தை தனக்கும் கற்றுக் கொடுக்க வேண்டினாராம். ஹஓஹோ இன்னிக்கு வாய்விட்டே சொல்லிட்டேனோ" என்று ஒன்றும் அறியாதவர் போல் திருநாடகம் புரிந்து மஹாஸ்வாமிகள் கேட்டாராம். தெய்வத்தின் குரலாக அருளப்பட்ட இந்த ஸ்லோகத்தை நாமும் தினந்தோறும் பாராயணம் செய்து நோயற்ற வாழ்வுடன் இன்புற்று வாழ்வோம்.

**அந்த அரிய அற்புத ஸ்லோகம். இதோ உங்களுக்காக -**

ஸர்வே பவந்து ஸுகிந:
ஸர்வே ஸந்து நிராமயா:
ஸர்வே பத்ராணி பச்யந்து
மா கச்சித் து:கபாக் பவேத்

அனைவரும் இன்புற்று வாழட்டும்
அனைவரும் நோயற்றோர் ஆகட்டும்
அனைவரும் மங்களங்கள் காணட்டும்
எவரும் துன்பமுற வேண்டாம்.

அனைவரும் நலமாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்தால் அதில் நாமும் தானே அடக்கம். தனி வாழிபாட்டை விட கூட்டு வழிபாடு கூடுதல் பலனை கொடுக்குமல்லவா. ஆகவே அனைவரும் நலமாக இருக்க இன்று முதல் அனைவரும் இத்துதியை மனதார எண்ணி மகிழ்வோம். மஹாபெரியவாளின் அருள் பெறுவோம்.

இதை பிரதிகளாக எடுத்து பலர் பயன் பெற விநியோகிக்கலாம்.



பாதக மலங்களை போக்கும்

பாத கமலங்களை பணிவோம்

# சங்கரானந்தம்



காஞ்சி மஹாஸ்வாமிகளின்
22வது ஆராதனை நாளான
06.01.2016 அன்று வெளியிடப்பட்டது.